# பகவத் பாதை

Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / செப்டம்பர் | மலர் - 12

தனிச்சுற்றுக்கு மட்டும்




Sri Bagavath

நினைவுகள்தாம் அகச்செயல், அவற்றில் உயர்ந்தவை, தாழ்ந்தவை என்று எந்தப் பிரிவுகளோ, பாகுபாடுகளோ கிடையாது என்பதைப் புரிந்து கொள்ளும்போது அனைத்துத் தீர்வுகளும் தாமாக ஏற்படுகின்றன.

– ஸ்ரீ பகவத்



## யோக சிகிச்சை

- ஸ்ரீ பகவத்

ஞானமும், விடுதலையும் மட்டுமே நமது வாழ்வின் பிரதானமான அம்சம்.

யோகம் - தியானம் போன்றவை, நமது செயல்களுக்குத் துணை செய்கின்றன

நாம், மனம் பொருந்தி ஒரு செயலைச் செய்யும் போது, அந்தச் செயல் சிறப்பாக அமைகின்றது.

இப்படி, மனம் பொருந்திச் செய்வதைத்தான் தியானம், யோகா என்று நாம் பொருள்படுத்துகிறோம்.

யோகா-தியானம் போன்றவைகளைக் கற்றுக் கொடுக்க, எத்தனையோ விதமான அமைப்புகள் உள்ளன. அவை அனைத்தும் இந்த வகையில் மக்களுக்கு பேருதவி புரிகின்றன.

நாம் நமது நூல்களிலும், சொற்பொழிவுகளிலும், யோகா-தியானம் பற்றி அதிகம் பேசுவதில்லை. நம்முடைய அணுகுமுறை பெரும்பாலும் ஞானத்தையும், விடுதலையையும் தழுவியே அமைந்துள்ளது. இங்குதான் நமக்குத் தெளிவு தேவைப்படுவதால், நமது விளக்கங்கள் யாவும் இவை பற்றியே அமைந்துவிட்டன.

யோகத்தின் மூலம் நாம் அரும்பெரும் சாதனைகளைச் சாதிக்காவிட்டாலுங்கூட, நமது அன்றாட வாழ்வில், நாம் யோகாவைப் பயன்படுத்தி பலனடைந்து கொள்ளலாம்.

நமது அன்பர்கள் எவராவது இத்தகைய கட்டுரைகளை எழுதுவார்களா என எதிர்பார்த்தேன். எவரும் எழுதாததாலும், இத்தகைய செய்திகளையும் நாம் அறிந்து கொள்ள வேண்டுவது அவசியம் என்பதாலும் இதனை நானே எழுத நேர்ந்துள்ளது.

இதில் விவரிக்கப்படும் யோக சிகிச்சை முறையை,

ஒரு முதலுதவியாக மட்டுமே பயன்படுத்திக்கொள்ளவேண்டும். தீவிரமான பிரச்சினைகளுக்கு, மருத்துவரிடம்தான் செல்லவேண்டும்.

யோகா - சிகிச்சை - எவ்வாறு நிகழ்கின்றது?

இதுபற்றிய சில விபரங்களை 'அனுஷ்டான ஆன்மீகம்' என்ற நமது நூல் ஒன்றில் ஏற்கெனவே விவரித்துள்ளேன். இருந்தாலும், மீண்டும் அதை இங்கு பார்ப்போம்.

ஒருமுறை நான் எனது கிராமத்து வீட்டிலிருக்கும்போது நிகழ்ந்த சம்பவம் இது. வீட்டை ஒட்டி கிணறும், மோட்டர் ரூமும் உள்ளன. மோட்டர் ரூமுக்குக் கதவு கிடையாது. கதவுக்குப் பதிலாக திரைச்சீலை ஒன்றுதான் தொங்கவிடப்பட்டிருக்கும்.

திரைச்சீலையை நகர்த்திதான் அறைக்குள் சென்று மோட்டரை இயக்கவேண்டும். மோட்டர் ரூமுக்குள் செல்வதற்காக, திரைச்சீலையைப் பற்றிப்பிடித்து, அதனை அகற்றினேன். அந்தத் திரைச் சீலைக்குள் மஞ்சள் நிறமுள்ள தேள் ஒன்று நமக்காகக் காத்திருந்திருக்கிறது. கையை வைத்ததும், எனது கையின் பெருவிரலில் கொட்டிவிட்டது.

தேள்கொட்டினால் வலி எப்படி இருக்கும்? அப்படித்தான் இருந்தது.

அப்போதுதான் யோகாவைக் கடைப்பிடித்தேன். தேள்கொட்டியதால் ஏற்பட்ட வலி உணர்வை நிதானமாகவும், மென்மையாகவும் கவனித்தேன்.

தேள்கொட்டிய இடத்தில், வலி 'விண்-விண்' என்று தெறித்தது. நறுக் - நறுக் என்று அதன் வலி விரலினுள் ஊடுருவிப் பாய்ந்தது. அந்த வலியில் எந்த இடைவெளியும் இல்லை. வலியைத்தவிர வேறு எதுவும் இல்லை.

அதை அமைதியாகவும், மென்மையாகவும் கவனிக்கும்போது தான் தெரிந்தது,

அந்த வலி, ஒரே ஒரு வலி அல்ல என்பது.

நறுக் - நறுக் என்னும் அந்த வலி, ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

இதில் யோகா எப்படிப் பயன்படுகிறது? நாம் இங்கு என்ன செய்யவேண்டும்? நான் அன்று என்ன செய்தேன்?

நாம் எப்போதும், நமக்குப் பிடிக்காத ஒன்றின்மீது ஈடுபாடு காட்டமாட்டோம். ஒன்று அதை அப்புறப்படுத்த நினைப்போம்; அல்லது அதிலிருந்து தப்பியோட நினைப்போம்.

இங்கு வலி ஏற்பட்டுள்ளது. அந்த வலி இல்லாமல் போகவேண்டும் என்று நினைக்காமலும், அந்த வலியிலிருந்து நாம் விடுபடவேண்டும் என்று எண்ணாமலும் இருக்கும் போது,

நாம் அந்த வலியிலிருந்து தப்பி ஓடாமல் இருக்கின்றோம்.

இதன்மூலம் நாம் அந்த வலி உணர்வுக்கு ஒரு முடிவை ஏற்படுத்த விரும்பவில்லை.

இதுதான் முதல்படி. அந்த உணர்வு அந்த வலி, இருந்துவிட்டுப் போகட்டும் என, கருத்தளவில் நாம் அதற்கு அனுமதி வழங்குகின்றோம். தப்பி ஓடவேண்டாம் என்ற முடிவையும், கருத்தளவில் எடுக்கின்றோம். இப்படி நாம் நமது கருத்தளவில், அந்த வலி உணர்வுக்கு, நாம் எதிரி அல்ல என ஓர் உடன்பாட்டுக்கு வருவதுதான் இந்த அணுகுமுறையின் முதற்படி.

அடுத்தது இரண்டாவது படி.

இந்த இரண்டாவது பகுதியில் நாம் நமது கவனத்தை அந்த வலியுடன் இணைக்கின்றோம். நமது கவனத்தை அந்த வலியுடன் இணைப்பது என்பது, அந்த வலியை உற்று நோக்குவது அல்ல.

அந்த வலி இயங்குவதற்கு நாம் உணர்வுபூர்வமான சுதந்திரத்தைக் கொடுக்கிறோம். அந்த வலி இயங்குவதற்கு எந்த எதிர்ப்பும் கொடுக்காமல் இடங்கொடுக்கிறோம். அந்த வலியானது,

எவ்வளவு ஆழத்துக்கு வேண்டுமானாலும் இறங்கிக் கொள்ளட்டும் என, அந்த வலியுணர்வு முழுமையாக இயங்க, அதற்கு இடங்கொடுத்து,

நாம் வேறு, அந்த வலிவேறு என எண்ணாது, அந்த வலியுணர்வுடன் நாமும் இணைந்து கொள்கிறோம்.

நமது முதுகில் எறும்பு ஒன்று ஊர்ந்து செல்லுகிறது என வைத்துக்கொள்வோம்,

அந்த எறும்புக்கு எந்த இடையூறும் செய்யாது அது ஊர்ந்து செல்லுவதற்கு முழு சுதந்திரம் கொடுத்து,

அது ஊர்ந்து செல்லுவதை உணர்வு பொருந்த கவனிப்பதுதான்,

அந்த உணர்வுடன் பொருந்திக்கொள்வதாகும்.

நாம் அதனைக் கவனிக்காமல் வேறு எங்கேயோ கவனத்தைச் செலுத்துவோமாயின்,

அது உணர்வுடன் பொருந்துவது ஆகாது.

நாம் அந்த வலியுணர்வுடன், உணர்வோடு பொருந்திக் கொள்ளும் போது,

அந்த வலியுணர்வுக்கும் நமக்கும் ஒருவித ஒருங்கிணைவு ஏற்படுகின்றது. அந்த வலியுணர்வையே நமக்குள் ஒரு பகுதியாக ஏற்றுக்கொண்டு,

அதோடு சேர்ந்து, நாமும் பயணிக்கின்றோம்.

அன்றும் இது தான் நிகழ்ந்தது.

தேள் கொட்டியதால் ஏற்பட்ட வலி முதலில் இடைவெளியற்ற ஒரே ஒரு வலி உணர்வாகத் தெரிந்தது.

பிறகு அந்த வலி உணர்வின் இயக்கம், வெளியே தெரிய ஆரம்பித்தது.

நறுக் - நறுக் என்ற வலி உணர்வு, ஒன்றன்பின் ஒன்றாக வருவது தெரிந்தது.

சற்று நேரத்தில், நறுக் - நறுக் கென்ற வலிகளின் முனைகளுக்கிடையே ஒரு இடைவெளியும் தோன்ற ஆரம்பித்தது.

நறுக்கென்ற ஒருவலி; பிறகு ஓர் இடைவெளி அதன்பிறகு மீண்டும் நறுக்கென்று ஒருவலி; அதன்பிறகு மீண்டும் ஓர் இடைவெளி. -இப்படி ஓர் இயக்கம் நிகழ்ந்திடுவதைப் பார்க்க முடிந்தது.

இங்கு, நமது கவனம் அந்த வலியில் உள்ளதா? அல்லது அந்த இடைவெளியில் உள்ளதா? அல்லது இரண்டிலுமே உள்ளதா?

அந்த வலியுணர்வில் மட்டுந்தான் உள்ளது. ஏனெனில் அதுதான் உணர்ச்சியாக அமைந்துள்ளது.

ஆகவே நமது கவனம், அந்த உணர்ச்சியோடு மட்டுந்தான் பயணமாகிறது.

வலி உணர்வுகளுக்கு இடையே ஏற்படும் இடைவெளி, தாமாக ஏற்படுகிறது. அதை நாம் உணர்வு பொருந்தக் கவனிக்கத் தேவையில்லை.

வலியுணர்வை அமைதியுடன் கவனிக்கும்போது, அந்த இடைவெளியும் தாமாக உருவாக ஆரம்பிக்கின்றது.

ஆரம்பத்தில் அந்த இடைவெளி மிகச் சிறிதாக அமைந்து மாறி மாறி ஏற்படும் நறுக் - நறுக்கென்ற வலி உணர்வைப்பிரித்துக் காட்டுகிறது.

இதே கவனத்துடன் தொடர்ந்து இருக்கும்போது, அந்த இடைவெளி, கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாக ஆரம்பிக்கின்றது.

நறுக் - நறுக்கென்ற இரண்டு வலி உணர்வுகளுக்கிடையே ஏற்பட்ட இடைவெளி,

ஆரம்பத்தில் ஒரு வினாடி நேரம் மட்டுமே இருக்கிறது.

பிறகு அந்த இடைவெளி, பல வினாடிகளுக்கு நீடிக்க ஆரம்பிக்கிறது.

இன்னும் சற்று நேரத்தில், வலியற்ற அந்த இடைவெளி மட்டுமே இருக்கிறது.

வலியுடன் வந்த நறுக் - நறுக்கென்ற உணர்வு நிரந்தரமாக நம்மை விட்டுப் போய்விடுகிறது.

நமது உடல், தனக்கு ஏற்படும் பிரச்சினைகளைத் தாமாகவே தீர்த்துவிடுகிறது.

இதற்கு நமது யோகா - கவனத்தை ஒருங்கிணைத்தல், உதவி புரிவதால், அந்தத் தீர்வு, விரைவாக ஏற்படுகிறது.

தேள் கொட்டியதால் ஏற்பட்ட வலி, ஐந்து நிமிடங்களுக்குள் முழுமையாக நீங்கிவிட்டது.

நமது வாழ்வில் நிகழ்ந்த, இதுபோன்ற இன்னுமொரு சம்பவம். இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னால் நிகழ்ந்த சம்பவம் இது.

நண்பர்கள் சிலருடன் மோட்டார் பைக்கில் பயணம் செய்தேன். ரோட்டில் இருந்த குழியொன்றில் பைக் இறங்கியதால், பைக் புரண்டுவிட்டது. பைக்கை ஓட்டி வந்த நானும் ரோட்டில் வீசப்பட்டுவிட்டேன்.

ஹெல்மெட் அணிந்திருந்தபோதிலும், முகத்தின் அடிப்பகுதியான நாடிப்பகுதியில் அடிபட்டுவிட்டது. வாயிலிருந்தும், மூக்கிலிருந்தும், காதுகளிலிருந்தும் இரத்தம் வழிய ஆரம்பித்தது.

என்னுடன் நண்பர்கள் இருவரும் வேறு பைக்குகளில் வந்திருந்தார்கள். விபத்து ஏற்பட்டுவிட்டது. இனி நாங்கள் என்ன செய்ய வேண்டும்?

தொடர்ந்து என்னால் பைக்கை ஓட்டமுடியாது. பைக்கை அங்கேயே விட்டுவிடவா? அதை எடுத்துவர ஏற்பாடுகள் எதையாவது செய்யவேண்டுமா?

எத்தகைய காயங்கள் ஏற்பட்டுள்ளன? என்னவிதமான சிகிச்சை செய்யவேண்டும்?

மருத்துவமனை எங்குள்ளது?

எவரைக் கலந்தாலோசிப்பது? (அந்தக் கால கட்டத்தில், இப்போது போன்று செல்போன் வசதி கிடையாது)

நான் நண்பர்களுடன் கலந்தாலோசித்தேன். ஒவ்வொருவரும் ஆலோசனையில் பங்கு பெற்றார்கள்.

இந்நிலையில் எனக்கு மயக்கம் வருவதுபோல் தோன்றியது. எனக்கு பயம் எதுவும் இல்லை. இருந்தாலும் மயக்கம் ஏற்படும் அறிகுறி தென்பட்டது.

அது பற்றி நண்பர்களிடம் தெரிவித்தேன். "இனி என்னால் உங்களுடன் ஆலோசனைகளில் பங்குபெற முடியாது. எனக்கு மயக்கம் வந்து கொண்டிருக்கிறது. எந்த வினாடியிலும் நான் மயக்கமாகிவிடலாம். ஆகவே என்ன செய்ய வேண்டுமென்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். என்னுடைய அனுமதி பெற முயற்சி செய்யவேண்டாம்" என்று அவர்களிடம் கூறிவிட்டு,

ரோட்டின் ஓரமாகக் கிடந்த உட்காரும் வசதியுடனிருந்த கல் ஒன்றின் மீது சாய்ந்து அமர்ந்து கொண்டேன்.

இப்போது, எனக்கு எந்த வேலையும் கிடையாது. எனக்கு ஏற்படும் மயக்க உணர்வின் இயக்கத்தை அமைதியாகக் கவனித்தேன். அதற்கு எந்த எதிர்ப்பும் காட்டாது, அதனை அப்படியே முழு மனதுடன் ஏற்றுக்கொண்டேன். எனக்குள் நிகழும் உணர்வை, எனது உணரும் தன்மையுடன் இணைத்து, அந்த உணர்வோடு பொருந்திக் கொண்டேன்.

மயக்கத்தைக் கொண்டு வருவதற்காக இயங்கிய தலைச்சுற்றல் உணர்வுக்கு முழு அனுமதி கொடுத்து,

அந்த உணர்வுடன் பொருந்திக் கொண்டேன்.

சில வினாடிகளிலேயே,

எனது தலைச்சுற்றல் மறைந்து விட்டது; மயக்கத்தைக் கொண்டுவரும் உணர்வு மறைந்துவிட்டது.

நான் சாதாரணமாகிவிட்டேன்.

எனது பணிகளில் சகஜமாக ஈடுபடக்கூடிய தகுதியை அடைந்துவிட்டேன்.

இதுதான் யோக சிகிச்சை.

இதனை அமைதியாகப் படித்து, நான் எதனைத் தெரியப்படுத்துகிறேன் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

உங்களுக்கு ஏற்படும், வலி மற்றும் வேதனை உணர்வுகளுக்கு இதனை ஒரு முதலுதவி சிகிச்சையாகப் பயன்படுத்திப் பாருங்கள்.

வலியிலிருந்து விடுபட வேண்டுமென்ற நிபந்தனையை சற்றுநேரத்திற்கு ஒதுக்கி வைத்துவிட்டு முயற்சி செய்தால்தான் இந்த சிகிச்சை முறை வெற்றி பெறும்.

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

பகவத் பாதையில் நமது பயணம் தொடங்கி இந்த இதழோடு ஒரு வருடம் நிறைவடைகிறது. பகவத் பாதையின் மூலம் தொடங்கிய நமது நட்புக்கு வயது ஒன்று. இந்தப் பாதை பலருக்கும் நல்ல திருப்பத்தைக் கொடுத்திருக்கிறது. நமக்குள் நல்ல பகிர்தலையும் கொடுத்திருக்கிறது.

ஆன்மிகத்தில் மிக உயர்ந்த நிலையாகக் கருதப்படுவது, முக்தி என்ற விடுதலையைத்தான். உண்மையில் முக்தி என்பது ஒவ்வொரு மனிதனின் பிறப்பியல்பும்கூட. அதனால்தான் ஞானமடைந்த பல மகான்களும் முக்தியை அவரவர்கள் பாணியில் ஓர் உயர்ந்த நிலையாகச் சொல்லிவைத்தார்கள். மனதைப் பற்றிய பல உண்மைகளைத் தத்துவமாகக் கொடுத்து வைத்தார்கள். 'அவர்கள் சொல்லியவிதம் வெவ்வேறாக இருக்கலாம். சொல்ல வந்த உண்மை ஒன்றுதான்'. காலத்தால் அது மறைபொருளாகவும், இரகசியமாகவும் மாறிவிட்டது. சாஸ்திரங்களின் கூற்றும் புரியாத புதிராக அமைந்துவிட்டது.

நாம் அகத்தை முழுமையாக அறிவதே, தன்னை அறிவதாகும். முக்தி என்பது தன்னை அறியும் ஞானத்தால் விளைவதாகும். அதனால் தான் ஞானிகள் "தன்னை அறிந்திடத் தனக்கொரு கேடில்லை" என்று சொல்லி வைத்தார்கள்.

வள்ளுவரும், "ஐயப் பாடாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்" - குறள் 702 - எனக் குறிப்பிடுகிறார். அதாவது தன் அகத்தை சற்றும் ஐயமில்லாமல் முழுமையாக அறிந்துகொள்பவனை தெய்வத்திற்கு ஒப்பாகக் கொள்ளலாம் எனக் கூறுகிறார்.

வள்ளலாரும்,

"தன்னை யறிந்தின்பமுற வெண்ணிலாவே ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே" என வேண்டுகிறார். வெண்ணிலா என்பது அறிவைக் குறிப்பதாகும். தன் அறிவிடம், தன்னை அறியும் தந்திரத்தைச் சொல்லும்படி கேட்பதாக, பாடல் அமைந்துள்ளது.

அந்த ஞானம் என்ற தந்திரம் ஓர் இரகசியமாகவும், எளிதில் புரிந்துகொள்ளமுடியாத ஓர் உயர்நிலை தத்துவமாகவும் இதுவரை இருந்துவந்துள்ளது.

அந்த ஞான இரகசியத்தை, ஆன்மிகத் தேடல் உள்ள அனைவரும் புரிந்துகொள்ளும்படி புதிய அணுகுமுறையில் மிக எளிமையாக இந்த நூற்றாண்டுக்குத் தந்தவர்தான் நமது **பகவத் ஐயா** அவர்கள்.

இவரது நாற்பது ஆண்டுகாலத் தேடலின் விளைவே இந்தப் பொக்கிஷம். பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையில் ஞான இரகசியம் எளிமையாக்கப்பட்டுவிட்டது. இந்த ஞானம் மீண்டும் இரகசியமாகவும், மறைபொருளாகவும் மாறிவிடாமல், தேடுதல் கொண்ட அனைவரிடமும் கொண்டு சேர்ப்பதே பகவத் பாதையின் நோக்கம்.

இத்தருணத்தில் இதுவரை பகவத் மிஷனுக்கு நன்கொடையாகவும், நன்கொடைச் சந்தாவாகவும் கொடுத்து உதவிய உள்ளங்களுக்கு சிரம் தாழ்த்தி எங்களது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இப்பணி சிறப்பாக நடைபெற இப்பகவத் பாதையில் பயணிக்கும் அனைவரையும் நன்கொடைச் சந்தாவைப் புதுப்பித்தும், புதியதாக வழங்கியும் பகவத் மிஷனின் தொண்டில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு சக பயணியாகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அன்புடன், **K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

**சென்னையில் ஐயாவைச் சந்திக்கும் முகவரி :**

**ஸ்ரீ பகவத்,** கதவு எண். பழைய எண். 107, (புதிய எண் : 77) நித்தியானந்தம் தெரு, வாசுதேவன் நகர், (காசி தியேட்டர் அருகில்), ஜாபர்கான்பேட்டை, (அசோக் நகர்), சென்னை-600083. செல் : 99442-15677

# ஆத்ம விசாரமும் ஒரு நடிகையின் குரலும்

எதிரே விரிந்திருக்கும், சூரியக்கதிர்கூட ஊடுருவ இயலாத அடர்ந்த சோலை வனத்தை விடப்பேரதிசயமாய் இன்று, பின் மண்டையில் நமக்கு அந்த வலி இல்லை. மூச்சடைப்புமின்றி, தெய்வாதீனமாய் சுவாசமும் சீராக வந்துபோகிறது. சுற்றிலும் மலைகளின் பிரதிப்பாலோ என்னவோ, இருளப் போகும் அந்த மாலைவேளை ஒருவித அடர்த்தியான நீலநிறத்தை உமிழ்ந்து கொண்டிருக்கிறது.

முன்னே அந்த உயர்ந்த மரங்களுக்கு நடுவே, துளியும் அசையாத நிஷ்ச்சல நீர்ப்பரப்பு. மிக அருகே ஓயாமல் அசைந்து கொண்டிருக்கும் கணநேரமும் நிரந்தர வடிவற்ற நெருப்பு. பொதுவாக இவ்விடத்தில் மாலை நேரம் "விசிலிங் த்ராஷ்" எனும் அந்த இசைப்பறவையின் பாடல் கேட்பதில்லை. இப்போது, இருவாச்சியோ அது என்னவோ, யாருக்கு வேண்டும் அந்தப் பெயர்த் தகவல்களெல்லாம், ஒற்றை நாதமாய் சற்றே இழுத்துக் கத்திக்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு இழுவைக்கும் குறைந்தது பத்து வினாடி இடைவெளியில் வெறுமையைத் தரிசிக்க முடிந்தது.

பைன் மரத்தின் விதை எரிவதால் திடீரென்று சடசடக்கும் நெருப்பின் ஒலிக்குப் பின்னே, மிதமான காற்றோடு மிதந்து வந்த யாரோ வாசிக்கும் அந்தத் தந்திக் (String) கருவியின் இசை நெருங்கி வந்தபோது, பெருங்காற்றினிடையே எப்படியோ உருப்பெற்று ஸ்திரமாய் நேரே நின்றுவிட, கணந்தோறும் தள்ளாடித் தவிக்கும் மெழுகின் நெருப்பினையொத்த "நான்" எனும் வியக்தியின் அசைவை, ஒரே ஊதலில் ஊதி அணைத்தது.

மூளையின் ரத்த ஓட்டம் பாய்ந்துகொண்டிருக்கும், சோம்பலற்ற இந்த அரிய வெற்றுச் சூழலிலேயே சற்று பகிர்ந்து கொள்ளவேண்டும், உடனே.

இல்லையெனில், பிரபஞ்சப்பேரண்டத்தின் கருந்துவாரத்திற்குள் கோள்கள் இழுக்கப்பட்டுக் காணாமல் போவது போல், தோன்றுகின்ற இந்தச் சொற்களும் அடையாளமே தெரியாமல் விழுங்கப்பட்டுவிடும். மீறிப்பகிர்வதும், விழுங்கியதன் மிச்ச சொச்சமே எனினும், தோன்றிய கணத்தில் பதிவு செய்ய இயலாமல் போகும் வார்த்தைகள், நான்காம் ஜாமத்தின் நஷத்திரங்களைப் போல, மின்னி மறைந்துவிடுகின்றன. தூங்கி எழுந்து காலை பார்த்துக்கொள்ளலாம் என்பதற்கில்லை.

ஆயினும், எழுதுவதிலும், பகிர்ந்து கொள்வதிலும், புரிந்ததை உரக்கப் பேசுவதிலும் நடைமுறைச் சிக்கல்கள் சில உண்டு. அது கேட்போரிடம் நம்மைப் பற்றிய "மாறாத் தோற்றம்" (Image) ஒன்றைப் பதிவாக்குகிறது. வாழ்வைப் பரீட்சார்த்தமாகவும், அதன் எல்லாப் பரிமாணங்களிலும் வாழ்ந்து பார்ப்பதில் அது ஒரு பெருந்தடையாக நிற்கிறது.

குறுகிய குணங்களுக்குள் (Characters) நாம் அடைக்கப்படுகிறோம். ஆனால் வாஸ்தவத்தில் நமக்கு எவ்வித ஒழுக்கவியல் கூறுகளும் இல்லை. அதேசமயம் நிரந்தரமான ஒழுங்கற்ற வாழ்வியல் செயல்பாடுகளும் இல்லை. நாம் வெறுமனே பிரவகிக்கிறோம்.

சுய அடையாளங்களை, தோற்றங்களை விட்டுப் பிரவகிக்கும் ரகசியத்தை மாத்திரம் நுனி நாக்கில் சுவைத்து விட்டோமானால், பிறர் நம்மீது வரையும் பிம்பங்கள், கோட்டுச் சித்திரங்கள் மீது எவ்வித ஆர்வமும் இருப்பதில்லை. உண்மையில் அது நம்மைச் சிறைப்படுத்துகிறது. நம்மைப் பற்றி, நாம் கொண்டுள்ள வியக்தி (Personality) எனும் தோற்றத்தை வலுவாக்குகிறது; "ஒழுங்கு" அல்லது "ஒழுங்கற்றது" எனும் சட்டகத்தினுள் நம்மை அடைக்க முயல்கிறது.

ஆனால் வாஸ்தவத்தில் புரிதலுக்குப் பின், நமக்கு எவ்வித உயரிய குணங்களும் தோன்றிவிடவில்லை. இன்னும் சொல்லப்போனால் ஒவ்வொரு நாளும் குணங்களிலிருந்து விடுபட்டுக் கொண்டே இருக்கிறோம். இருப்பின் எடையும் குறைந்து கொண்டே இருக்கிறது. புற வாழ்வில் நீந்திச் செல்வதும் எளிதாகிறது. குணங்களால் நிரம்பிய வியக்திதான் "நான் பிரவகிக்கிறேன்" எனும் மாயத்தோற்றத்தை உருவாக்கி வைத்துள்ளது. இல்லையெனில் வெறும் பிரவாகம் மட்டுமே எஞ்சி நிற்கும்.

எனவே வெகு தொடக்கத்திலேயே நம்மைக் குறித்த எவ்விதத் தோற்றமும் உருவாகாமல் கலைத்தெறிந்துவிடுவது இன்றியமையாததாகிறது. அது வாழ்வின் இயல்பான, சுதந்திரமான இயக்கத்திற்கு பெரும் உதவியாகும். நாம் என்றாவது ஒருநாள் மறைக்கப்பட்ட கடைசி ஜென் காளை ஓவியத்தின் குறியீட்டைப் போல எங்காவது அமர்ந்து மதுவைச் சுவைத்து அருந்தி கொண்டிருக்கலாம் அல்லது, சூர்யாஸ்தமனத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டு வெறுமனேயும் அமர்ந்திருக்கலாம். மிக அதிகபட்சமாக, அறிநிலையில் யாருக்கும் தொல்லையளிக்க இயலாது எனும் உத்திரவாதத்தை மாத்திரமே முன் வைக்க இயலும்.

வாழ்வை முழுமையாக, பூரணமாக ருசித்து வாழ்தலே புரிதலுக்குப் பின் நமக்கு அடிநாதமாக அமையும். வாழ்வு போகும் போக்கில் நாம் பகிர்ந்து கொள்ளவும் செய்யலாம். அது மிக இயல்பானதாகவும், எளிமையாகவும் இருக்கக் கூடும்.

நம்மைப் பொறுத்தவரை, இதனை ஒரு சித்தாந்தமாகவோ, வழிமுறையாகவோ, கோட்பாடாகவோ மாறிவிடாமல் தொடர்ந்து கலைத்து வீசிக் கொண்டே இருப்பதில் ஆர்வங்கொள்கிறோம். மன்னித்துவிடவும். அதனைச் சிதைப்பதைப் போல் தோன்றினாலும் இதை உயிர்ப்புற வைக்க வேறு வழியே தெரியவில்லை.

சில மாதங்களுக்கு முன் நடந்த ஒரு சுவையான நிகழ்வை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விழைகிறோம்.

மிகுந்த விரக்தியடைந்திருந்த தோழர் ஒருவர் அலைபேசியில் அழைத்து வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார். அவரும் ஒரு இயற்கை ஆர்வலராக இருந்தமையால் சத் தர்சனத்திற்கு வர விருப்பம் தெரிவித்திருந்தார்.

ஒருநாள் நண்பர்களுடன் அவரையும் சத் தர்சனத்திற்கு அழைத்துச் சென்றோம். தோழர் சூன்யப்ரவாகம் படித்திருந்ததால், அலைபேசியில் தொடர்பு கொண்டிருந்தபோதே நம்மிடம் நிறைய பேசவேண்டும் என விருப்பம் தெரிவித்திருந்தார்.

சத் தர்சனம் சென்றதுமே, கை கால், முகம் கழுவிவிட்டு சிறிது நேரம் மௌனம் அனுஷ்டித்துவிட்டு சத்சங்கத்தில் ஈடுபடுவோம் என்று தோழர் எண்ணியிருந்தார். (இதெல்லாம் பின்னாளில் அவர் கூறியபின் தான் நமக்குத் தெரிய வந்தது)

நாங்கள் சத் தர்சனத்திற்குள் நுழைந்ததுமே பள்ளியிலிருந்து வீடு திரும்பிய சிறார்களைப் போல பைகளை அறைக்குள் விட்டெறிந்துவிட்டு கண நேரமும் தாமதிக்காமல் தோழரையும் அழைத்துக்கொண்டு அருகிலிருந்த மலைவனத்திற்குச் சென்றடைந்து நடக்கத் தொடங்கினோம்.

தோழருக்கு ஒன்றுமே புரியவில்லை. வேறுவழியின்றி அமைதியாகப் பின் தொடர்ந்தார். அந்த அற்புதமான மலைக் கானகத்தினுள் மாலை வேளையில் ஏறிக் கொண்டிருக்கும்போது, வளைவொன்றில் திரும்பியவுடன் கீழிருக்கும் ஆதிவாசி கிராமங்களும் மறைந்துபோக முழுமையாகக் காட்டினுள் நுழைந்தோம்.

நாம் தோழரிடம் "காட்டிற்கே உரித்தான மாலை நேரத்து அசலனத்தினை இனி நீங்கள் அனுபவிக்கலாம்" என்றோம்.

மௌனத்தை எவ்வகையிலும் கலைக்காத சப்தங்களில் மாலைக் கூடடையும் பக்ஷிகளின் பாடல்களும் ஒன்று.

நாம் குறிப்பிட்ட அந்த வினாடிப்பொழுதில் தோழர் அதை கிரகித்துக் கொண்டார். சந்தியா வேளைக் கானகத்தின் பொன்னிற ஒளி தோழரை ஆக்கிரமித்துக் கொண்டது. மாயமாய் இந்த அமைதி சடாரென்று எங்கிருந்து வந்தது? இது காட்டினுள் இருந்து தோன்றிய அமைதியா? அல்லது என்னுள் உதித்ததா? என்று வியந்து கேட்டார்.

வாஸ்தவத்தில் அது காடும், நானுமாக இரண்டற்ற மௌனம்.

காற்றில் அசைந்து கொண்டிருந்தாலும், வெறுமனே பார்க்கையில் நம்முள் அசையாத் தன்மையை அப்பெருமரங்கள் நிகழ்த்திக் கொண்டிருப்பதை தோழரும் புரிந்து கொண்டார். இருப்பினும் அச்சூழ்நிலையிலாவது பரஸ்பரம் ஏதாவது சத்சங்கம் நிகழும் எனத் தோழர் நினைத்திருந்ததைப் பொய்யாக்கி, காடு, மரங்களைப் பற்றி மட்டும் பேசிக் கொண்டிருந்தோம்.

அகத்தையும், புறத்தையும் சுத்திகரிக்கும் ஒரு மந்திரமே மலை. துவக்கத்தில் அது சற்றே முரட்டு ஆசானாகத் தோற்றமளிக்கும்.

மலையேறத் துவங்கியவுடன் வெகு நிதானமாக சற்றும் வேகமின்றி மெதுவாக ஏறவேண்டும். யார் முதலில் போவது. நான் எந்த இடத்தில் இருக்கிறேன் எனும் பிரக்ஞையின்றி ஒருவித ஒப்புக் கொடுத்தலோடு நகர வேண்டும். மூச்சு வாங்கினால், நின்று நிதானித்துவிட்டு மேலே செல்லவேண்டும். ஏறுகையில் நிகழும் ஆழமான சுவாசம் தூய பிராண சக்தியினால் உடலை நிரப்புகிறது. வியர்வைச் சுரப்பிகள் அனைத்தும் திறந்து ரத்த நாளங்களில் உள்ள சிறு சிறு அடைப்புகளும் ரத்தவோட்ட வேகத்தால் கரைக்கப்பட்டு ஒரு விதத்தில் இயற்கையான பைபாஸ் சர்ஜரி (Auto-Byepass) நடந்தேறுகிறது.

நடக்கையில், உடலின் ஆற்றல் உறிஞ்சப்பட்டு எரிக்கப்படும்போது, மீண்டும் சக்தியைப் புதுப்பித்துக் கொள்வதிலேயே உடல் முழு முனைப்புடன் செயல்படுவதால், எண்ணங்களுக்கும், ஏனைய உணர்வுகளுக்கும் போதிய சக்தி செலுத்தப்படாமல், "நான்" அல்லது "எனது" என்கின்ற வியக்தியின் பிரக்ஞை இழந்து தடுமாறி மெல்ல மெல்ல இருப்பு மௌனமாகிறது. எண்ணப் பாலங்கள் உடைந்துவிடுவதால் முன்னிலைப் படர்க்கையற்று உடல், மலையோடு ஒன்றி, மெல்ல மெல்ல உச்சியை அடைந்து அமரும்போது, வீசும் காற்று மிச்ச சொச்ச உணர்ச்சிகளையும் அடியோடு துடைத்தெறிந்து நம்மைப் பிரவகிக்கச் செய்கிறது.

வேஷங்களுக்கெல்லாம் மூல வேஷமான உண்மையைத் தேடுபவன் எனும் முமுக்ஷு வேஷமும் கலைந்து அசையாப் பொய்த் தோற்றம் கொண்ட "நான்" எனும் வியக்தி மற்றும் புத்தியில் தொடர்ந்து சேகரமாகிக் கொண்டிருக்கும் விஷய ஞானங்கள் எவ்வளவு குறுகிய எல்லைக்குட்பட்டுள்ளது எனப் புலனாகி, ஒரு வித சரணாகதியும் கையறு நிலையும் இயல்பாகவே கைகூடுகிறது.

ஆனால் இது நிகழவேண்டும் என நினைத்து மலையேறினால், அது இலகுவாக நழுவியோடிப் போய்விடுகிறது. என்ன ஒரு மர்மம்!

பல கோயில்களை மலைமேல் அமைத்ததன் தத்துவம் இதுவாகவும் இருக்கலாம். நம்மைப் பொறுத்தவரை உச்சியில் உள்ள ஆலயம் பெரிய விஷயமில்லை; மலையே கோவில்தான். இன்னும் பலப் பல உடல் மனோ ரகசியங்கள் காடுகளோடும், உயர்ந்த பர்வதங்களோடும் பின்னிப் பிணைந்திருக்கின்றன.

சரி, மலையுச்சிக்குச் சென்று அமர்ந்தாவது சத்சங்கத்தைத் துவங்குவோம் என்று தோழர் எதிர்பார்த்தார். நீண்ட நேரத்திற்குப் பின் அதுவும் நிகழவில்லை. வெகு சாமான்ய உலகாயதப் பேச்சுக்கள் மாத்திரமே அவ்விடத்தில் நிலவியது.

நீண்ட தூரம் காட்டினுள் மேலே ஏறி ஒரு உச்சியில் அமர்ந்து தேங்காய், பழம், கருப்பட்டியைச் சுவைத்துத் தின்றுவிட்டு, ஏறக்குறைய இருள் கவ்வும் நேரம்வரை புல்பரப்பில் அமர்ந்து அளவளாவிவிட்டு கீழே இறங்கத் தொடங்கினோம்.

தோழர் ஒன்றும் பேசாமல், அமைதியாகக் கீழிறங்கிக் கொண்டிருந்தார்.

இடையில் ஒரு நண்பர், மிக உயர்ந்து வளர்ந்திருந்த கிளைகள் நிரம்பிய அழகிய ஒரு மரத்தின் மேல் கிடுகிடுவென ஏறத் தொடங்கினார் அவர் வலிமையானவர். மரமேறுவதில் விருப்பம் கொண்டவர்.

தோழர், தேமே! என்று தலையை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அலைபேசியில் புகைப்படமெல்லாம் எடுத்துக் கொண்டவுடன், ஒரு வழியாக நண்பர் கீழிறங்கி வந்ததும் மலையிறங்கத் தொடங்கினோம். இடையிடையே பாறை மீது குத்த வைத்து அமர்ந்து அரட்டை. மீண்டும் கருப்பட்டி, தேங்காய், வாழைப்பழம். இப்போது கடலை மிட்டாயும் சேர்ந்து கொண்டது.

ஒரு பெரிய பாறைத்தொடரின் அருகில் வந்ததும், எதிரிலிருந்த பெரும் பள்ளத்தாக்கைப் பார்த்துக் கொண்டு சற்றே ஓய்வெடுத்தோம். தோழர் சற்றே பொறுமையிழந்து காணப்பட்டார். அப்போது அலைபேசியில் மற்றொரு நண்பருக்கு சிக்னல் கிடைத்து ஓர் அழைப்பு வந்தது.

அது "ஆண்ட்ரியா" எனும் பாடகி பாடிய ஒரு பாடலாக ஒலித்தது

நண்பர் பேசி முடித்ததும் நாம்.

"இந்த மாலை வேளையில் இது என்ன ஒரு அற்புதமான பாடல்? என்ன திரைப்படம் இது? மீண்டும் ஒருமுறை அதை முழுமையாகக் கேட்க முடியுமா?" என்று கேட்டோம்!

ஓ! தாராளமாக! என்று அவர் அந்தத் திரைப்படத்தின் பெயரைச் சொல்லிவிட்டு பாடலை மீண்டும் ஒலிக்குமாறு இயக்கினார்.

நம் அருகில் அமர்ந்திருந்த தோழரின் முகம் ரண கொடூரமாக மாறியது. (இதையும் விரிவாகப் பின்னாளில் தோழர் கூறியபோதுதான் அறிந்து கொண்டோம். பல்லையும் நறநறவென்று கடித்திருக்கக் கூடும். அதைக் குறிப்பிடவில்லை அவர்) அந்தப் பள்ளத்தாக்கின் பேரழகுப் பகுதியில் அப்பாடலை அமைதியாக, ஏதோ தியானம் செய்வதைப் போல் கண்களை மூடி ரசித்துக் கேட்டுவிட்டு, பாடல் முடிந்தவுடன், "அக்காலத்தில் பொதுவாக பாட்டு அல்லது குரல்வளம் நன்றாக இருந்தால் பாடகியின் முகம் அவ்வளவு அழகாயிருப்பதில்லை ஆனால் இப்போதெல்லாம் அது ஒருங்கே அமைந்துவிடுகிறது. அதற்கு உதாரணம் ஆண்ட்ரியா தான்.." "எவ்வளவு அழகான மெய் சிலிர்க்கும் குரல்! அதே சமயம் கொள்ளை அழகாகவும் இருக்கிறாரே" என்று பெரும் அதிசயமாய் அதைக் குறித்து சற்று நேரம் உரையாடிக் கொண்டிருந்தோம்.

(தோழரின் பின்னாள் குறிப்பு – அட காலக்கொடுமையே. மெய்ம்மையைக் குறித்தும் ஞானத்தைப் பற்றியும் ஏதோ சில நல்ல விஷயங்களைப் பகிர்ந்து கொள்ள வந்தால்... வாரக் கடைசியில் சுற்றுலா சென்று கேளிக்கையில் கழிக்கும் சாமான்யப் பயல்களுடன் சிக்கிச் சிதறுண்டு கொண்டிருக்கிறோமே, கடவுளே!)

தோழருக்கு ஒரே ஆசுவாசம். அந்தச் சூழலில் எங்கள் கைகளிலிருந்து திடீரென்று மதுப் புட்டியும், சிகரெட்டும் முளைத்துவிடவில்லை என்பதே, ஒருவழியாக சத் தர்சனம் சென்று சேர்ந்தபோது, முற்றிலுமாக இருட்டிவிட்டது.

கடைசியாகத் தோழர் கேட்டுவிட்டார்.

"ஐயா இரவு உணவு உண்ட பிறகாவது அமர்ந்து, சில நல்ல விஷயங்களை உரையாடுவோமா...!?"

நமக்கு ஒன்றும் விளங்கவில்லை. இவ்வளவு நேரமும் அவ்வளவு மோசமான விஷயங்கள் ஒன்றும் பேசவில்லையே..!!!

"சரி ஐயா" என்று பொதுவாகச் சொல்லி வைத்தோம்.

உணவுக்குப் பின் நீண்ட நேரம் உரையாடிவிட்டுத் தூங்கப் போனோம்.

"புரிதல்"

எல்லா வார்த்தைகளுமே அவரவரின் அறிந்தவைகளுக்கும், அனுபவங்களுக்கும் ஏற்ற நாம ரூபங்களை பின்னிக் கோர்த்துக் காட்டாமல், கடந்து செல்வதில்லை. எனினும் அறிதல், புரிதல் போன்ற சொல்லாடல்களை விட "இழத்தல்", "கரைதல்", "கைவிடல்", போன்ற எதிர்மறைச் சொற்கள் சற்றே புரிவதற்கு உதவுவதைப் போல தற்சமயத்திற்குத் தோன்றுகிறது.

பிரம்மபுத்ராவையொத்த பிரம்மாண்ட நதியின் கரையில் அமர்ந்துகொண்டு நுரைத்துப் பொங்கி சீறிப் பாயும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும் முழு மரங்களை, தக்கைகளை, அழகிய செடிகொடிகளை, குப்பைக் கூளங்களை, எவ்வித சம்பந்தமுமில்லாமல் பார்த்துக்கொண்டிருப்பதைப் போன்றது புரிதலின் தொடக்கம்...

ஆனால் கரையில் பத்திரமாக அமர்ந்துபார்த்துக் கொண்டிருக்கிறோம் என்றெண்ணி சற்றே திரும்பிப் பார்த்தால், நம் பின்னும், கீழும் ஆர்ப்பரித்து மற்றவைகளோடு நம்மையும் சலனமில்லாமல் சுமந்து ஓடிக்கொண்டிருக்கும் நதி... "கரையிலமர்ந்து, கண்டு கொண்டிருக்கிறோம்" எனும் பிரம்மையும் உடைந்து, நாமும் பிரவகிப்பதைப் போன்றது புரிதலின் முடிவு. இங்கே ஆரம்பமும் முடிவும் ஒருசேரவே நிகழ்கிறது....

இல்லை! அது நிகழ்வல்ல... நிகழ்வு என்பது காலத்தின் பாற்பட்டது. அது இப்போது நிகழ்ந்தது என்றால் நிகழாத காலம் ஒன்று இருந்தது என்றாகிவிடும். காலங்கடந்து எப்போதும் அது நிகழ்வதை வெறுமனே அறிந்துகொள்கிறோம்...

இல்லை, அறிந்துகொள்வுமில்லை...! அறிந்து கொள்ள அசையா நிரந்தர "வியக்தி" ஒன்று தனியாகவுமில்லை. இவ்விடத்தில் வார்த்தைகளின், விளக்கங்களின் எரிபொருள் தீர்ந்து, முன் நகர இயலாமல் காலங்காலமாய்த் தவிக்கின்றன. சொற்களைக் கொண்டு விளக்க எத்தனிக்குமளவு அது கடினமானதல்ல என்பதே காரணம். அது அனைத்துயிரின் வெகு சாமான்ய பிறப்பியல்பு. உணர்ச்சிகளும், எண்ணத் துணுக்குகளும் கணந்தோறும் தோன்றித் தானாக மறைந்து கொண்டிருப்பதை ஏற்று அனுமதித்தல் என்பதன் நீட்சியில், அவையோடு நானும் கரைந்து கொண்டிருக்கிறேன் எனும் எளிய பார்வையோடு அப்பயணம் முடிவுறுகிறது.

நீ புரிந்து கொண்டாயா? என்று யாராவது கேட்கையில் "இல்லை" என்றோ "ஆமாம்" என்றோ தலையசைக்க இயலாத இம் மெய்ம்மைப் புதிர்.... எப்பேர்ப்பட்ட, உயர்ந்த ஆன்மீக அனுபவமாயினும், ஒரு வித பேரமைதியை தரிசித்திருந்தாலும் காலத்தே அது "எனக்கு நடந்தது" "என்னுடைய அனுபவம்" என மாறும் கணத்தில், அவை மிகச் சாதாரண (Mundane) உலக விஷயங்களுக்கு ஒப்பாகிவிடுகின்றன.

அகத்தைப் பொறுத்தவரை "நான்" அல்லது "என்" முயற்சியின்றியே ஓயாமல் எண்ணங்களும் உணர்வுகளும் கொந்தளித்துத் தோன்றி மறைந்து கொண்டிருக்கின்றன... சற்றே ஆழமாய்ப் பார்க்கையில் அவைகளுக்கு ஒரு நிரந்தர இருப்பு இல்லாததால்தான் "எனக்குத் தோன்றியது" "என்னுடைய எண்ணம்" "என்னுடைய உணர்வு", "என்னுடைய அனுபவம்", "எனக்கு நடந்தது" எனும் பிம்பத்தைத் தோற்றுவித்து அதன் மீது வேர்விட்டுப் பிடித்துக் கொண்டு தேங்கிவிடுகிறது.

இந்த எண்ணங்களும், உணர்வுகளும் தன்னைத் தானே மூலப் பொருளாகக் கொண்டு உற்பத்தி (Fabricated) செய்வதே, "நான்" எனும் தோற்றம் அல்லது வியக்தி. "பார்ப்பவன்" எனும் வேஷமிட்டு அது பதுங்கிக் கொண்டு பிரவகிக்காமல் தேங்கி விடுகிறது. வாஸ்தவத்தில் எழுகின்ற பல கோடி எண்ணங்களில் அதுவும் ஒன்றாய்ப் பிறந்து ஓயாமல் ஓலமிட்டு இறந்து கொண்டிருக்கிறது. ஒருபோதும் அதற்கு ஒரு நிரந்தர இருப்பு அல்லது மையம் இல்லை எனப் பார்த்த கணத்தில் விடுதலை.

"மனம்" எனும் அகம் முற்றுப் பெற்றது.

இப்போது "புறம்" எனும் உடல் சார்ந்த வாழ்வினைச் சற்றே அவதானித்துப் பார்ப்போமாயின், அகத்தின் தூல வடிவமாய் அதுவும் இடைவெளியின்றித் தோன்றி மறைந்து நிரந்தரமற்றதாய்ப் பிரவகித்துக் கொண்டிருப்பதைக் காண இயலும். அப்போது அகம் புறம் பிரிவும் கரைந்தோடிவிடும்.

'தானாய்த் தோன்றியது தானாகவே மறைந்துவிடும்' எனவே "விட்டுவிட்டு வேலையைப் பாருங்கள்" என்று ஐயா கூறுகையில் அது ஒரு அடர்த்தியான, புரிபடாத சூத்திரம் போல முன்பு தோன்றியதுண்டு.

அந்த "வேலை என்பது வெறுமனே ஒரு சமுதாயக் கடமைகளை நிறைவேற்றுதல், அடிப்படைத் தேவைகளைத் தீர்த்துக் கொள்ளும் பணிகளை ஏற்றுச் செய்தல், நாட்டை முன்னேற்றுதல், குடும்பத்தை முன்னேற்றுதல், உலகத்தை உந்தித் தள்ளுதல், வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ளல் போன்ற முன்னேற்றங்கள் (Advancement) சார்ந்த விஷயமாக மட்டும் இல்லை. அவையெல்லாம் "பிழைத்தல்" (Survival) சம்பந்தப்பட்டது. "உயிரோட்டமான வாழ்தல்" (Living) என்பது வேறு எனப் பின்னர் புரிந்தது.

மேற்குறிப்பிட்ட முன்னேற்றம் சார்ந்த அனைத்தும் புறவாழ்விற்கு இன்றியமையாதது. அத்தியாவசியமானது என்றாலும் "வேலையைப் பார்ப்பது" என்பது, 'முழுமையாக வாழ்தல்' என்பதையும் உள்ளடக்கியே உள்ளது. வாழ்வின் பல்வேறு பரிமாணங்களைத்தொட்டு ருசித்து வாழ்தலையும் அது குறிக்கிறது. நம் "வேலை" அல்லது "கடமை" எல்லாம் அதற்கு உதவத்தான்.

அது வெறுமனே தேவைகளை நோக்கிய ஓட்டம் என்றாகிவிட்டால், வெகு சீக்கிரத்தில் நம்மை விரக்தியில் ஆழ்த்திவிடும். அதுவும் வாழ்வின் நிரந்தரமற்ற தன்மையை கவனித்துக் கண்டுணர்ந்துவிட்ட முமுக்ஷுக்களின் நிலை மேலும் மோசமாகிவிடும். காலத்தால் வேறு வழியின்றி அவர்கள் ஆசிரமங்களை நோக்கியும், சாமியார்களை நோக்கியும் ஓடத் துவங்கிவிடுவார்கள். "வியக்தி" சாதுர்யமாக வேறு ஒரு வடிவம் எடுத்துக் கொண்டுவிடும்.

உயிர் பிழைத்தலுக்கும், உயிரோட்டமாக வாழ்வதற்கும் ஏராளமான வித்தியாசங்கள் உண்டு.

"புறம்" வாழப்படவேண்டும். ஆனால், துரதிஷ்டவசமாக, வாழ்தலின் சமூகக் குறியீடுகள் அச்சமூட்டுவதாகவும், கற்பனைக்கெட்டா உலகத்தைச் சேர்ந்ததாகவும், ஒரு சிலருக்கே உரியதாகவும் தோற்றம் கொண்டிருக்கிறது.

"வாழ்தல்" என்பது, பணத்தை வாரியிறைத்துச் செலவிடுதல், பிடித்தவைகளை வாங்கிக் குவித்தல், போதை தரும் வஸ்துக்களுக்கு அடிமையாகிக் கிடத்தல், ஏராளமான பொருட்களை உடைமையாக்கிக் கொள்தல், எதிர்பாலினத்தை தனதாக்கி இறுக்கிப் பிடித்துக் கொள்தல், உளவியல் ரீதியாக மிகுந்த பாதுகாப்பான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயற்சித்தல் போன்ற பல விஷயங்களை உள்ளடக்கியே புரிந்து கொள்ளப்படுகிறது.

ஆனால் வாழ்க்கை இதற்கு நேர் மாறானது. நம் ஒவ்வொரு புற அசைவையும் கவனித்துப் பிரக்ஞையோடு வாழ முற்படும் கணத்தில், அதன் கதவு விரியத் திறக்கத் துவங்குகிறது. புற வாழ்வில் சற்றே நுண்ணுணர்வை வளர்த்துக் கொள்ளும்போது, கோடானு கோடி இன்பங்கள் கொட்டிக் கிடப்பதும் வாழ்ந்து முடிக்க இப்பிறவி நிச்சயம் போதாதென்றும் உணர இயலும். ஒவ்வொருவருக்கும் தன்னியல்பிற்கேற்ற ஒரு சுவதர்மம் இருந்தே தீரும். தனித்தன்மையான சுவைகளும், நுகரும் ஆர்வமும் நிச்சயம் உண்டு. காலத்தால் அது சற்று மாறிக் கொண்டேயும் இருக்கலாம்.

இலக்கியம், கவிதைகள், காடுகள், பறவைகள், கதைகள், இசை, நடனம், ஓவியம், நற்பணிகள், திரைப்படம், சேவை விளையாட்டு, பகிர்தல், பயணங்கள், இன்னும் இன்னும் பிறரைப் பாதிக்காத எதுவாயினும், தனியொரு சுயமாகத் தேங்கிக் கொள்ளாத, தன்னியல்பிற்கு ஒத்த ஏதாவது ஒன்றோ, பலவோ, வாழ்வின் அம்சத்தை உற்சாகமாய் நிரம்பி வழியச்செய்கிறது.

வாழ்வின் இயல்பான ஓட்டத்தை, அழகியலுடன், நுண்ணுணர்வுடனும், விழிப்புணர்வுடனும் பூரணமாக எவ்விதக் குற்ற உணர்வுமின்றி வாழ்ந்து அனுபவிக்கும்போது, எண்ணங்களுக்கும், உணர்ச்சிகளுக்கும் அவசியமற்றுப் பாய்ந்து கொண்டிருக்கும் சக்தியை, "வாழ்வு" உறிஞ்சிக் கொண்டு இருப்பை அர்த்தமுடையதாக்குகிறது. சுற்றியுள்ள, எல்லாச் சிறிய விஷயங்களின் மேலும் சட்டென்று வெளிச்சம் வாரியிறைக்கப்பட்டதைப் போல, அழகுடையதாகிறது. காற்றிலாடும் வலிமையான உயரமான மரங்களையும், காற்றில் அசையும் புற்கற்றைகளையும், சிற்றோடைகளையும், கடற்கரை சிறு மணல் துகள்களையும் பேரழகுடையதாக்குகிறது.

எல்லாவற்றையும் விட, சாரமான விஷயம், வாழ்வை அனுபவித்து வாழ்பவனால்தான் புறத்தைச் சார்ந்த உடைமைகளின், உறவுகளின், தனதாக்கி வைத்திருக்கும் அறிவு மற்றும் பொருள் சார்ந்த விஷயங்களின் நிரந்தரமற்ற தன்மையை கிரஹித்துக் கொள்ள முடியும்.

சில நாட்களுக்குப் பின் நம்முடன் மலையேறிய தோழரிடமிருந்து அழைப்பு வந்தது. அவர்

"ஏங்யா அப்ப ஆன்ட்ரியாவோட குரலையும் அழகையும் ரசிக்கத் தோன்றுவது, இயல்பானதுதான் இல்லீங்களா! அது என்னுடைய புரிதலுக்கு எவ்வித இடையூறாகவும் இருக்காது அல்லவா?" என்று கேட்டார்.

அதற்கு நாம், "நீங்கள் உயிர்ப்புடன் இருக்கிறீர்கள் என்பதற்கான அடியாதாரம் அது. எக்காரணத்தைக் கொண்டும் புற வாழ்வின் ரசனையை, அழகியலை, அனுபவித்தலை இழந்துவிடாதீர்கள். அதே நேரம் எவ்வித உணர்வுக்கும் ஒரு காலக்கெடு உண்டு. அது எப்பேர்ப்பட்ட அழகுணர்வானாலும், அன்புணர்வானாலும், கருணையுணர்வானாலும் பிரவகித்தோடிவிடும் எனும் புரிதலை அறிந்து கொண்டால், எனதாக்கிக் கொள்ளும் "மமகாரக் கிளர்ச்சி" அற்றுப் போய்விடும். அது கொஞ்சம் இருந்தாலும் என்னவாகிவிடப்போகிறது.... காலம் எல்லாவற்றையும் கற்றுக்கொடுத்துவிடும்...." வேறொரு மெய்ம்மை மார்க்கத்தில் ஆழமான ஈடுபாடு கொண்டிருந்த நம் நண்பர் ஒருவருடன் அழகியலைக் குறித்து ஒருமுறை உரையாடிக் கொண்டிருந்தபோது, அவர் சொன்னார்.. "யோகிகள், ஞானிகள் எல்லாம் அழகான மலைகள், காடுகள், அருவிகள் மற்றும் கடலலைகளையும் சுந்தரமாக விரிந்த நீர்ப்பரப்பையும் ரசித்து வாழ்வார்கள். ஆனால் எங்காவது மிக அழகான பெண்ணைக் காண நேர்ந்தால் அந்த இயற்கையை ரசிப்பதுபோல அப்பெண்ணின் சௌந்தர்யத்தை ரசிக்க மாட்டார்கள். அவர்களால் அதனை வெறுமனே கடந்து போக இயலும்" என்றார்.

என்ன ஒரு வறட்சியான சிந்தனை என்று எண்ணிக் கொண்டோம். அவர் முதியவராதலால் நாம் எதுவும் பேசவில்லை. பல வருடங்கள் உருண்டோடிய பிறகுதான் அதன் வேறொரு பரிமாணத்தை கிரஹித்துக் கொள்ள இயன்றது. இயற்கையின் எல்லையற்ற பிரம்மாண்டத்தின் அழகைக் கண்டுகளிக்கும்போது, அதைத் தனதாக்கிக் கொள்ளவேண்டுமென உந்துதல் சாதாரணமாகத் தோன்றுவதில்லை. ஆனால் உலகாதாயப் பதவி, ஆண், பெண், மண் விஷயங்களில் நம்மையறியாமல் அதுகிளர்ந்தெழுந்துவிடுகிறது. அக்கணத்திலேயே அதைப் பிரவகித்துக் கொள்ளாமல் அது தேங்கி கர்ம வட்டத்தில் சிக்கிக்கொள்கிறது.

ஒரு மனங்கவரும் நிலப்பரப்பை, மலையைக் காணும்போது, ஆஹா இது எனதாகிவிட்டால் எப்படி இருக்கும் எனும் கிளர்வையும்ஏற்றுப் பிரவகிக்காமல் விட்டுவிட்டால், அது நம்மை அகச் சிறையில் அடைத்திடுவதைப்போல ஒரு அழகிய ஆணையோ, பெண்ணையோ, அத்தியாவசியமற்ற பொருளையோ கண்டு ரசித்துப் பிரவகிக்க விடுவது என்பது விடுதலையே. இது யோகிகளுக்கு மாத்திரம் உரித்தான விஷயம் அல்ல. மெல்ல மெல்ல, புரிதலில் அனைவருக்கும் கைகூடலாம். பரீட்சார்த்தமாக, தொடக்கத்தில் தோல்வியுற்றாலும் அதுவும் சரியே. நாமும் பல முறை தோல்வியுற்றுக் கொண்டுதான் இருக்கிறோம்.... நமக்கு யோகியாக விருப்பமில்லை. சாதாரணமாக ஏற்றுக் கொள்ளுங்கள் என்றோம் தோழரிடம்.

தோழர் இப்போது அடிக்கடி பேசுகிறார். நம்மீது கோபப்படுவதில்லை. நெருங்கிய நண்பராகிவிட்டார். தேங்காய், கருப்பட்டியோடு மீண்டுமொருமுறை அவரை மலைக்கானகத்திற்கு அழைத்துச் செல்லவேண்டும்! பள்ளத்தாக்குப் பாறையில் நெருப்பு மூட்டிக் குளிர்காய்ந்து கொண்டு உரையாடும்போது. பாடகியின் அழகைப் போல ஏதாவது ஒரு நடிகையின் குரலைப்பற்றி கூட அவர் சுதந்திரமாக எவ்வித குற்ற உணர்வுமின்றி விவாதிக்கக் கூடும்.

எல்லாவற்றுக்கும் மேல், "வாழ்தல்" என்பது சுதந்திரமாகக் கைகளை, கால்களைத் தூக்கியாடும் ஒரு கொண்டாட்டமான, கலை நயமிக்க களி நடனமாயினும், அது அடுத்தவர்களை இடித்துத் தள்ளித் துன்புறுத்தாமலும், கண்களைக் குத்திவிடாமலும் ஆடுவது என்பதும் அதன் வெகு முக்கிய சாரம்சமாகும்.

இரா. ஆனந்தக்குமார்,
சூன்யப்பிரவாகம் நூல் ஆசிரியர்
செல் : 98422-31582

20-7-2012

## வேண்டுகோள்

நமது பகவத் பாதையில் வரும் கட்டுரைகளை பலமுறை படித்துத் தெளிவுபெறுவதோடு பாதுகாக்கப்படவேண்டியவைகளாகவும் இருப்பதால், அன்பர்களின் ஆலோசனையின் பேரில், அக்டோபர் 2011 முதல் செப்டம்பர் 2012 வரை வெளிவந்த பகவத் பாதையின் 12 இதழ்களோடு மேலும் பல புதிய கட்டுரைகளையும் இணைத்து, வண்ணமயமாக, தரமாக 'பகவத் பாதை 1' என்ற பெயரில் வெளியிட இருக்கிறோம்.

இதைக் குறைந்த விலையில் விற்பனை செய்து, அனைவரையும் வாங்கிப் படிக்க வைக்கவேண்டும் என்பது, நமது நோக்கம். எனவே, ஆர்வமுள்ள அன்பர்கள் நன்கொடை அளித்து அனைவரும் பயன்பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். எவ்வளவு பணம் என்பது முக்கியமல்ல, உதவும் மனமே முக்கியம்.

நன்கொடைகளை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லதக்க Cheque or D.D. யாகவோ அனுப்பலாம்.

மேலும் விளம்பரங்களும் வரவேற்கப்படுகின்றன. அதுபற்றிய விபரங்களுக்கு 99942 05880, 97891 65555 என்ற எண்களில் தொடர்பு கொள்ளுங்கள்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

## ஜென் கதை
### சீடனின் தர்க்கம்

அந்த மடாலயம் மிகவும் அமைதியாக இருந்தது. திடீரென்று அமைதியைக் கிழித்துக் கொண்டு, பெரும் ஆரவாரம் கேட்டது. ஆரவாரத்தின் நடுநடுவே விவாதங்கள், கேள்விகள், பதில்கள், கூச்சல்கள், குறுக்கீடுகள் என்று அந்த இடமே களேபரமாயிருந்தது.

குருவுக்கு இது ஆச்சரியமாக இருந்தது. நானாவிதமாக கேட்டக் குரல்களில் ஒன்று, அவருக்குத் தெரிந்த குரலாக இருக்கவே உற்றுக்கேட்டார் அவர். அது அவரது சீடர்களுள் ஒருவனின் குரல். உடனே அவனை அழைத்து, இந்தக் கூச்சலுக்கான காரணத்தைக் கேட்டார்.

"குருவே, அறிஞர்களின் குழு ஒன்று உங்களைக் காண வந்துள்ளது" என்றான் அந்த சீடன்.

அவன் சொல்வதை, குரு அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தார். "நான் அதற்கு அனுமதி கொடுக்க மறுத்தேன். அதனால் ஏற்பட்ட ஆட்சேபக்குரல்கள் தான் இவை" என்ற அவன் தொடர்ந்து "உண்மையான ஞானம் இல்லாமல் வெறும் புத்தக அறிவை மட்டுமே வைத்திருப்பவர்களுடன் எங்கள் குரு பேசி நேரத்தை வீணாக்க மாட்டார் என்று அடித்துச் சொல்லிவிட்டேன். வந்திருப்பவர்கள் வெறும் தர்க்க வாதிகள். போகுமிடமெல்லாம் பற்பல நியாயவாதங்களையும், தர்க்க ரீதியான கொள்கைகளையும், பேசிப் பேசி மக்களிடையே எண்ணற்ற முரண்பாடுகளை உண்டாக்குபவர்கள்" என்றான்.

ஜென் கதை சீடனின் தர்க்கம்

"உண்மை தான்", என்ற குரு தொடர்ந்து புன்னகையுடன், "ஆனால், நீயும் அவர்களில் ஒருவன் என்பதை மறந்து விட்டாயே, உன்னை மிகவும் வித்தியாசமானவன் என்று அவர்களுக்குக் காட்ட முற்பட்டு அதே சச்சரவுக்கும் பிரிவுக்கும் நீயே காரணமாகிவிட்டாயே" என்றார் அமைதியாக.

நீதி : உண்மை, தர்க்கத்தால் நிறுவப்படுவதில்லை. மௌனம், தன்னை மௌனம் என்று எப்போதும் சொல்வதில்லை.

"வாதத்திற்கு மருந்துண்டு. பிடிவாதத்திற்கு மருந்தேது"



## Sri Bagavath Mission

Chennai office will be opend on : 30-9-2012
23/10, Old Bank of Baroda Street,
Secretariat Colony, Ambattur, Chennai-600 053.
Cell : 98840-97438, 99520-71525

நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

*If undelivered please return to:*

**Sri Bagavath Mission**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891-65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

*To*

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.